# சித்திரை நட்சத்திரம்.

சித்திரை நட்சத்திரத்திற்கு நடுநாளென்று பெயர் வந்ததற்கு என்ன காரணமென்று ஆராய்தல் வேண்டும்..

இருபத்தேழு நட்சத்திரங்களையும் மூன்று கூறாக்க, அசுவனி முதல் ஆயிலியம் வரையிலுள்ள ஒன்பது நட்சத்திரங்களும் முதற்கூறாகும்.

மகமுதல் கேட்டை வரையிலுள்ள ஒன்பது நட்சத்திரங்களும் நடுக்கூறாகும்.

மூலமுதல் இரேவதி வரையிலுள்ள ஒன்பது நட்சத்திரங்களும் கடைக்கூறாகும்,

நடுக்கூறாகிய மகமுதல் கேட்டை வரையிலுள்ள ஒன்பது நட் சத்திரங்களுள் சித்திரை நட்சத்திரம் நடுவாகின்றது. இந்நடுக்கூறாகிய ஒன்பது நட்சத்திரங்களையும் மூன்று கூறாக்க அத்தம் சித்திரை சோதியென்பவை நடுவாகின்றன. இம்மூன்றனுள்ளும் சித்திரை நடு வாகின்றது. இருபத்தேழு நட்சத்திரங்களிலும் நடுவுள்ளது சித்தி ரையே, ஆதலால் சித்திரை நட்சத்திரத்திற்கு நடுநாளெனப் பெயர்வந் தது, இங்கனம் கூறல் விளங்கவைத்த லென்னும் அழகின் பாற்படும்.

சித்திரையின் பெயர் பெரும்பான்மையும் இப்பொருளிலேயே வருகின்றன. இப்பெயர்களைப்பற்றி நிகண்டு நூலார் முரண்படுகின்ற, னர். அடியிற்காண்க.

### திவாகரம்.

நெய்வான் மீன்சுவை பயற்றோடு சேர்வான்
செவ்விதின் துவட்டா நாள் சித்திரையென்ப'

### பிங்கல நிகண்டு.

நெய்மீன் அறுவை நேர்வான் பயறு
நடுநாள் துவட்டா நாளே தச்சன்
தெரியின் இன்னவை சித்திரைப் பேரே.

### சூடாமணி நிகண்டு.

அளக்குநெய் பயறுமீனே அறுவையே ஆடை தூசு
துளக்கிலர் நடுநாள் தச்சசன் துவட்டா நாள் சித்திரைப்பேர்.

## அகராதி.

அறுவை, ஆடை, சுவை, செவ்வி, தச்சன்.
துவட்டாநள், தூசு, நடுநாள், நெய், பயறு, மீன்.

நாயென்பது நடுவாகலின் நாய்மீனென்பது நெய் மீனென்றாயிற்று செய்மீனெனினும் நடுநாளெனினும் ஒக்கும்.

சித்திரை நாள் வெண்ணிற முடையதாகலின் அறுவையாயிற்று,

அறுவை = வெள்ளிடை. தூசு என்பதற்கும் அப்பொருளே.

நால்மீனென்பது நேர்வாணாயிற்றெனலாம் நால்மீன் = நடுநாள், நால் = நடு. † நால் - நள், நள் - நடு. [† மொழி நூல் இலக்கணவியல் 162 - ம் பக்கம் பார்க்க.]

பசரு என்பது முதல் கருப்பத்தையும் கருப்பம் உடம்பினுள் கடுவிடத் துண்டாதலால் பிறகு நடுவினையும் உணர்த்தி நிற்கும்.

‡ பசரு என்பது பயறு என்றாகிச் சித்திரையை யுணர்த்திற்று. ரகரம் றகரமாதல் பிற்காலத்துவழக்கு. பிரிவு பிறிவு. முரிதல் முறி தல். பயறு = சித்திரை, நடுநாளென்பது. [‡ மொழி நூல் முதனிலையியல் 225 - ம் பக்கம் பார்க்க.]

சித்திரை நட்சத்திரத்துக்கு அதிதேவதை விசுவகர்மா ஆகலின் துவட்ட நாளாயிற்று. தச்சன் அவன் மரபினன்.

சித்திரகாயம் என்பது சித்திரையாயிற்று. சித்திரகாயம் = புலி, என் எனின்? “சித்திரை யிருமீன் சிறுபுலிக் கண்பேர்' பிங்கல நிகண்டு நூலார் கூற்றுப்படி ஈண்டு ஆராய்ச்சி செய்யப்பட்டது.

சுவையாலிறப்பது மீனாகலின் சுவைமீனென்பது மீன்சுவையென ஏடு பிறழ்ந்தது போலும், செவ்வி = நடு. செவ்விதின் அடைமொழிவுமாம்.

சூடாமணி நிகண்டு நூலார் கூற்றுப்படி அகராதி நடைபெற்றது. நட்சத்திரங்களின் பெயர்களுட்சில தவறாகவே யிருக்கின்றன. பிற்கூறுதும்.

இங்ஙனம்
மாகறல், கார்த்திகேய முதலியார்
கண்டி, சென்னை.
சித்தாந்தம் - 1914 ௵ - நவம்பர் ௴